[1st November 1958

அரசாங்கம் ஒரு உத்தியோகஸ்தரை நியமித்து, அறிக்கை சமர்பிக்கும்படி செய்து, அதை வெளியிடுவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இது மூலிகைகள் பயிரிடுவதைப் பற்றியது. விஸ்தரிக்கப்பட்டுத் தான் வருகிறது. இப்பொழுது இரட்டிப்பாகச் செய்து வருகிறோம்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : என்னென்ன பச்சிலைகளைத் தயாரித்து வருகிறார்கள் என்ற பட்டியலை சபை முன்பு வைக்க கனம் அமைச்சர் அவர்கள் முன்வருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : "மூலிகைகள்" என்று சொல்லுகிறார்களே, அந்தச் செடிகளை வளர்க்கிறோம். (சிரிப்பு.)

SRI K. B. S. MANI : பண்டைக் காலத்தில் அகஸ்தியர் ? யாகூப் போன்ற பெரிய முனிவர்கள் இந்தப் பச்சிலைகளை வளர்க்கும் தத்துவ முறையை எழுதி வைத்திருக்கிறார்கள். அவர்கள் கூறியுள்ள தத்துவ முறைப்படி, ஆகமங்களின்படி அவைகளை மருந்திலே சேர்த்தால் தான் சரியாக வேலை செய்யும். அந்தத் தத்துவ முறைப்படி அரசாங் கத்தால் வளர்க்கப்படுகிற பச்சிலைகள் வளர்க்கப்படுகின்றனவா, அந்த முறைப்படி மருந்துகள் தயாரிக்கப்படுகின்றனவா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : மூலிகைகளைக் கொண்டு மருந்துகளைச் செய்வது முறைப்படி செய்யவேண்டும். செடியை வைத்திய முறைப்படி வளர்ப்பதற்கு இதுவரையிலும் சாஸ்திரம் கண்டுப்பிடித்த தாகத் தெரியவில்லை. (சிரிப்பு.)

MR. SPEAKER : இன்னும் ஐந்து நிமிஷங்கள்தான் இருக்கின் றன. ஆகையால் மூலக் கேள்விகளுக்கு மட்டும் பதில்கள் அளிக்கப்படும். அடுத்த கேள்வி . . . .

SRI A. GOVINDASAMY : உப கேள்விகள் கேட்பதற்காகத் தான் மூல கேள்விகள் போடப்படுகின்றன. ஆகையால் இவைகளை நாளைக்கு எடுத்துக் கொள்ளலாமென்று வேண்டிக் கொள்கிறேன்.

MR. SPEAKER : நாளைக்கும் கேள்விகள் பாக்கி இருக்கும். முக்கியமான கேள்வியாக இருந்தால் உப கேள்விகள் போடுவதற்கு நானே அனுமதித்து வருகிறேன்.

*Construction of houses for Harijans of Salem Town*

* 790-J *Q.*—SRI A. MARIAPPAN : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) சேலம் நகரிலுள்ள ஹரிஜனங்கள் தங்களுக்கு வீடு கட்டிக் கொடுக்க வேண்டுமென்று விண்ணப்பங்கள் கொடுத்திருக்கிறார்களா ?

(ஆ) அப்படி கொடுத்திருந்தால், அவை மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes, Sir. The Salem Harijans Munnetra Sangam has given a representation on behalf of the Harijans of Narayanaswamipuram.

(*b*) The Harijan Housing Scheme is not at present implemented in urban areas. Hence no action can be taken on the request. The question of acquisition of lands for house-sites to the Harijans of Narayanaswamipuram is, however, under consideration.